Regd : No. TN-MS C 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone 420212 8 பக்கம் விலை 60 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G 6-TN-MS C P. P 55



நல்லவரின் எண்ணம்

நல்லவரின் எண்ணங்கள் ஒருபோதும் வீணாவதில்லை.

- அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

வெற்றி

நம்மிடம் ஆற்றல் இருக்கிறது. நல்ல நம்பிக்கையுடன் நாம் நடைபோட்டால் அந்த உண்மைப்பாதையில் வெற்றி பெற முடியும்.

- பேரறிஞர் அண்ணா



மலர் : 9 சென்னை 20-12-1984 வியாழன் ★ ★ ★ வெளியூர் 21-12-1984 வெள்ளி இதழ் 64

## கோடானுகோடி மக்களின் பிரார்த்தனை பலித்தது
## தவக்கோலம் பூண்ட தமிழக மக்கள் நெஞ்சமெல்லாம் குளிர்ந்தது
## முதல்வருக்கு நடந்த ஆபரேஷன் முழுவெற்றி:

# புரட்சித்தலைவர் விரைவில் தமிழகம் திரும்புகிறார்




ஃ மக்கள் சக்தி மகத்தானது... அப்பப்பா புரட்சித்தலைவர்மீது நாடு கொண்டிருக்கும் அன்பு-பாசப்பிணைப்பு-வார்த்தைகளில் வடிக்கமுடியுமா?

புரட்சித்தலைவர் நலம்பெற

# நாடெங்கும் சர்வ சமய கூட்டுப் பிரார்த்தனை

## ஆலயமணியோசை விளைவித்த அற்புதசக்தி

சென்னை, டிச. 20- முதல்வர் புரட்சித்தலைவர் பூரணநலம் பெற்றுப் பொலிவுடன், புதுவலிவுடன் தாயகம் திரும்பிட வேண்டி நாடெங்கும் நடந்த சர்வசமய பிரார்த்தனைகள், கூட்டு வழிபாடுகள், தொழுகைகள், விசேஷ அபிஷேக ஆராதனைகள் குறித்துச் செய்திகள் வந்து குவிந்த வண்ணமிருக்கின்றன.

அன்னை ஜானகி அம்மையாரின்வேண்டுகோளை ஏற்று தமிழகமே தவக்கோலம் பூண்டது. எங்கும் பக்திப் பரவசம்.

அமெரிக்காவில் உள்ள புருக்ளின் மருத்துவமனையில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு சிறுநீரகமாற்றுசிகிச்சை நடைபெற்றநேரத்தில்தமிழகத்திலுள்ளகோடானு கோடி மக்கள்- தங்கள் தங்கத் தலைவன்விரைவில் பூரண குணம் பெற ஜாதி மத, இனம், மொழிகளுக்கு அப்பாற்பட்டு எல்லா ஆலயங்களிலும் விசேஷ பூஜைகள் நடத்தினர்.

சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி துணைத் தலைவர் எஸ். நடராசன், தலைமையில் இளைஞர் அணியினர் பெசன்ட் நகரில் உள்ள வரசக்தி வினாயகர் ஆலயத்திலும், அன்னை வேளாங்கண்ணி

5-ம் பக்கம் பார்க்க

## மாற்று சிறுநீரகம் நன்கு இயங்குகிறது- டாக்டர்கள் பேட்டி

சென்னை, டிச. 20- கோடானுகோடி மக்களின் இதய தெய்வமாக விளங்கும். முதல்வர் புரட்சித் தலைவருக்கு நடந்த மாற்று சிறுநீரக அறுவை சிசிச்சை வெற்றிகரமாக முடிந்தது பூரண நலத்தோடு புதுப் பொலிவோடு முதல்வர் புரட்சித்தலைவர் விரைவில் தமிழகம் திரும்புவார் என்ற மனமெல்லாம் மகிழ்ச்சி கொள்ளவைக்கும் செய்தியையும் டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு அமெரிக்க புருக்ளின் மருத்துவமனையில் நேற்று இந்தியநேரப்படி மாலை 6-30 மணிக்கு மாற்று சிறுநீரக சிகிச்சை நடந்தது.

முதல்வர் புரட்சித் தலைவரின் சகோதரர் பெரியவர் சக்கரபாணியின் மகள் லீலாவதியின் சிறுநீரகம் புரட்சித் தலைவருக்குப் பொருத்தப்பட்டது.

ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்தது. சிறுநீரகம், உடலோடு பொருந்தி இயங்கத் தொடங்கிவிட்டது.

சிறுநீரகம் அளித்தலீலாவதியும் நலமாக இருக்கிறார் என டாக்டர்கள் மகிழ்ச்சியோடு அறிவித்தனர்.

நேற்று மாலை 6- 15 மணிக்கு (இந்தியநேரப்படி) ஆபரேஷன் அறைக்கு முதல்வர்புரட்சி தலைவர் கொண்டு போகப்பட்டார்.

இந்த அறையை ஒட்டியுள்ள மற்றொரு அறைக்கு பெரியவர் சக்கரபாணியின் மகள் லீலாவதி கொண்டு போகப் பட்டார்.

மாலை 6-30 மணிக்கு ஆபரேஷன்தொடங்கியது லீலாவதியின் சிறுநீரகம் ஆபரேஷன் மூலம் அகற்றப்பட்டு முதல்வர் புரட்சித்தலைவருக்கு பொருத்தப் பட்டது.

இரு ஆபரேஷன்களும் ஒரேநேரத்தில் நடந்தது.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு அறுவை சிகிச்சையை டாக்டர் காலிட்பட் மேற்கொண்டார்.

லீலாவதிக்கு டாக்டர் ஜான்ஹாங் அறுவை சிகிச்சையை மேற்கொண்டார்.

இந்தியநேரப்படிஇரவு 9-30மணிக்கு ஆபரேஷன் முடிந்தது.

அதன் பிறகு முதல்வர் புரட்சித் தலைவரும், லீலாவதியும் அவரவர் அறைகளுக்கு கொண்டு போகப் பட்டனர்.

### ஆபரேஷன் முழு வெற்றி

ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்து முடிந்ததாக மருத்துவமனை அதிகாரி பெல்ஸ்கி தெரிவித்தார்.

### அறிக்கை

முதல்வர் புரட்சித்தலைவருக்குநடந்தஆபரேஷன் பற்றி புருக்ளின் மருத்துவமனை டாக்டர்கள் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளனர். அதில் கூறியிருப்பதாவது:

"ஆபரேஷன் முழு வெற்றி" பெற்றுள்ளது. முதல்வர் எம். ஜி. ஆருக்குப் பொருத்தப்பட்டுள்ள சிறுநீரகம் நன்றாக இயங்கி சிறுநீரை வெளியேற்றுகிறது.

ஆபரேஷன் அறைக்குச் செல்லும்போது முதல்வர் எம். ஜி. ஆர். உற்சாகத்துடன் இருந்தார். ஆபரேஷனுக்குப் பின் முதல்வர் எம். ஜி, ஆரும், லீலாவதியும் நலமாக உள்ளனர்.

இவ்வாறு அந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்து முடிந்த விவரத்தை முதல்வர் புரட்சித்தலைவரின் தனிச் செயலாளர் பரமசிவம் டாக்டர் பெரியசாமி



ஆகியோர் சென்னைக்கு டெலிபோன் மூலம் தெரிவித்தனர்.

### சிறுநீரகம் இயங்குகிறது

அவர்கள் கூறிய விவரம் வருமாறு:-

முதல்வர் புரட்சித்தலைவருக்கு பொருத்தப்பட்ட சிறுநீரகத்தை அவரது உடல் ஏற்றுக்கொண்டது.

ஆபரேஷனுக்குப் பிறகு சிறுநீரகம் சீராக இயங்கத் தொடங்கியது. ரத்தத்தைச் சுத்தப் படுத்தி அசுத்தத்தை சிறுநீராக வெளியேற்றும் வேலையை சரிவரச் செய்கிறது.

லீலாவதியும் நலமாக உள்ளார். டக்டர்கள் மகிழ்ச்சியோடுஇருக்கிறார்கள்.

இவ்வாறு தனிச் செயலாளர் பரமசிவமும், டாக்டர் பெரியசாமியும் தெரிவித்தனர்.

### விரைவில் தமிழகம் திரும்புவார்

சென்னை அப்பல்லோ மருத்துவ மனையைச்

2-ம் பக்கம் பார்க்க

இன்றைய 'அண்ணா' 8 பக்கம் 60 காசு தான்

## டாக்டர்கள் மகிழ்ச்சி

முதல்வர் புரட்சித் தலைவருக்குநடந்தமாற்று சிறுநீரக சிகிச்சை வெற்றிகரமாக நடந்து முடிந்ததாகவும் எவ்விதப் பிரச்சினையும் ஏற்படவில்லை என்று புருக்ளின் மருத்துவ மனையில் இருந்து டாக்டர்கள் அமைச்சர் அண்டேயிடம் தெரிவித்தனர்.

மாற்று சிறுநீரகம் சிறப்பாக இயங்குவதாகவும், ரத்தத்தை சுத்தப் படுத்தி சிறுநீரை வெளியேற்றி வருவதாகவும் டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

மாற்று சிறுநீரகத்துடன்

## ஆரோக்கியமாக வாழும் 2 லட்சம் பேர்

உலகம் முழுவதும் 2லட்சத்திற்கும் மேற்பட்டவர்களுக்கு மாற்று சிறுநீரகம் பொருத்தப்பட்டு ஆரோக்கியமாக வாழ்கிறார்கள்.

ஒருவருக்கு உயிர் வாழ ஒரு சிறுநீரகம் போதுமானது. ஆகவே சிறுநீரகம் பழுதடைந்தவர்களுக்கு வேறு ஒருவர் உடலில் இருந்து சிறுநீரகம் அறுவை சிகிச்சை மூலம் எடுத்து பொருத்தப்படுகிறது.

அமெரிக்காவில் இந்த ஆபரேஷன் ஏராளமான அளவில் வெற்றிகரமாக நடத்தப்படுகிறது.

உலகம்முழுவதும் 2 லட்சத்திற்கும் மேற்பட்டோருக்கு மாற்று சிறுநீரகம் பொருத்தப்பட்டுஆரோக்கியமாக வாழ்கிறார்கள்.

திருவண்ணாமலையில்

## பிரதமர் ராஜீவை ப. உ. ச. வரவேற்கிறார்

திருவண்ணாமலை, டிச.20- தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் கலந்து கொள்ள நாளை 21-ந் தேதி காலை 10 மணிக்கு திருவண்ணாமலை வரும் பிரதமர் ராஜீவ் காந்தியையும், நிதியமைச்சர் டாக்டர் நாவலரையும், கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. வரவேற்கிறார். பிரதமர்ராஜீவ், டாக்டர் நாவலர் கலந்து கொள்ளும் கூட்டத்திலும் ப. உ. ச. பேசுகிறார்.

## கருணாநிதி தேச விரோத பிளவு சக்தியே!

# இதோ அடுக்கடுக்கான ஆதாரம்...

"தி.மு.கழகத்தைப் பொறுத்த வரையில் ஜாதிகளைக் கடந்து மதங்களைக் கடந்து எல்லோரும் தமிழர்கள் என்ற உணர்வோடு-அவர்கள் மூத்தரையர்களாக இருக்கலாம்- முக்குலத்தோராக இருக்கலாம்.வன்னியர்களாக இருக்கலாம் செட்டியார்களாக இருக்கலாம்- அதைப் பற்றி கவலை இல்லை" என்று பேசி கருணாநிதி தன்னைச் சுத்த சுயம்பிரகாசம் போல காட்டிக்கொள்ள முயற்சிக்கிறார்.

**ஆனால் உண்மை என்ன?**

பிளவுசக்திகளால் நாட்டுக்கு அபாயம் என்று தலைவர்கள் பேசும்போது - அந்தப் பிளவு சக்திகள் எங்கோ பஞ்சாபில், அசாமில் இருப்பதாகவும் - தமிழ் நாட்டில் அத்தகைய சக்திகள் இல்லையென்றும் சிலர் நினைக்கக்கூடும்.

**தமிழ் நாட்டில் அத்தகைய சக்திகளின் மூல ஆதாரமே கருணாநிதி தான்.**

**பிளவு சக்தி என்றால் என்ன?**

ஒற்றுமையோடு வாழும் ஒரு சமூகத்தை இல்லாத பொல்லாத பேதங்களைக் கூறி நச்சு விதைகளைத் தூவி - ஒற்றுமையைக் கலைப்பது தான் பிளவு சக்தி.

**இந்த தீயபணியை அரசியலில் விதைத்துப் பயிராக்கி வருவதே கருணாநிதி தான்.**

தமிழ் சமூகம், தமிழ்ச்சாதி, தமிழ் இனம் என்று அவர் பேசுவார்.

கிட்ட நெருங்கினால் தமிழ்நாட்டைத் தாய்நாடாகக் கொண்டுள்ள மக்களை-

மொழியால் - இனத்தால் - சாதியால் பிளவுபடுத்திப் பேசுவார்.

**தன்னுடைய அரசியல் செல்வாக்கிற்கு அடிப்படையே இந்தப் 'பிளவு' வேலை தான் என்பது கருணாநிதியின் தீர்மானமான முடிவு.**

★ பெருந்தலைவர் காமராஜரை "மரம் ஏறுகிற ஜாதி" என்று 1966ல் முரசொலியில் கட்டுரை வெளிவர ஏற்பாடு செய்தார்.

★ பேரறிஞர் அண்ணாவின் மறைவிற்குப் பிறகு இவருக்கு முதலமைச்சர் பதவி கிட்டாதோ என்று தோன்றிய நேரத்தில்- 'இனி தமிழ்நாட்டில் முற்பட்ட வகுப்பார் முதலமைச்சராக வரமுடியாது' என்று செய்தி பரப்பினார்.

-பொருள் புரிகிறதா? நாவலர் முற்பட்ட (முதலியார்) வகுப்பாம். அவர் முதல்வராக முடியாதாம்.

★ **அதுமட்டுமல்ல. சிறிதுகாலம் டாக்டர் நாவலர் அமைச்சரவையில் இடம் பெறாமல் இருந்தபோது கருணாநிதி என்ன சொன்னார் தெரியுமா?**

"தமிழர்களே! தமிழர்களே என்னுடைய மந்திரி சபைதான் தமிழக வரலாற்றிலேயே உண்மையான பிற்பட்டவர் அடங்கிய மந்திரிசபை- ஜஸ்டிஸ் கட்சி ஆட்சியில் கூட முற்பட்ட சாதியினர் மந்திரிகளாக இருந்தனர். ஆனால் என் மந்திரி சபையில் எல்லோரும் பிற்பட்டவர்கள் அதிலும் நான் மிகமிகமிகப் பின்தங்கியவன்" என்று பேசினார்.

**இதன் பொருள் என்ன? நாவலர் முற்பட்ட (முதலியார்) வகுப்பாம்! அவர்இல்லாத மந்திரிசபை என்பதே தனிச்சிறப்பாம்!**

★ **தி. மு. கழகத்திற்கு குறிப்பிட்ட சில தொகுதிகளில் வெற்றிகிடைக்கவில்லை. அதற்கு-**

"சவண்டிப்பார்ப்பனர்களும் கலப்பட வியாபாரிகளும்தான் காரணம்" என்றுதி.மு.க பேரிகைகள் முழங்கின. பொருள் புரிகிறதா? ராஜாஜி-காமராஜ் கூட்டு இருந்ததால் பிராமணர்-நாடார் ஓட்டுக் கிடைக்கவில்லை என்று ஜாதி துவேஷ விஷ விதையைத் தூவினார்.

★ கருணாநிதி ஆட்சியை விமர்சனம் செய்த மோகன் குமாரமங்கலத்தைக் கன்னடத்தாயின் சேய் என்றார். 'விஞ்ஞான ரீதியாக அவர் தமிழன் இல்லை' என்று பேச வைத்தார்.

★ **கருணாநிதியைக் கண்டித்த கம்யூனிஸ்ட் தலைவர் கல்யாணசுந்தரத்தை 'கருப்பூர் முதலியார்' என்று வர்ணித்தார்.**

தொழிற்சங்கத் தலைவர் குசேலரின் செய்திகளை 'அலைஓசை' வெளியிட்டதால் - 'வேலூர் நாராயணரெட்டியார் - குசேலரெட்டியாரைப் பிரபலப்படுத்துகிறார்' என்று பேச வைத்தவர் கருணாநிதி.

அதுமட்டுமா - தமிழ்நாட்டுத் தலைவர்கள் பலரை - "பாலக்காட்டு கணவாய்" - "கைபர் கணவாய்" - என்றெல்லாம் பேசி வகுப்பு ஒற்றுமைக்கு உலைவைத்தவர் கருணாநிதி.

"அண்டே அமைச்சர்-ஹீராசந்த் எம்.பி-உக்கம்சந்த் எம்.எல்.ஏ." என்று கிண்டல் பேசினார்.

**இவையெல்லாம் ஓரிரு உதாரணங்களே!**

**எதுவரினும் இந்திய ஒற்றுமையைக் கட்டிக்காப்பவர் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்.**

**அந்த ஒற்றுமையை வெட்டிச் சாய்ப்பவர் கருணாநிதி.**

**தமிழகம் போல் அனைத்திந்தியாவையும் அமைதிப் பூங்காவாக்கப் பாடுபடுவது புரட்சித் தலைவர் எம். ஜி. ஆரின் தாயுள்ளம்!**

அமைதிப்பூங்காவான தமிழகத்தைப் பஞ்சாப் ஆக்க வேண்டுமென ஆசைப்பட்டது கருணாநிதியின் பேயுள்ளம்

**இருப்பது சில மணி நேரங்களே-**

**சிந்திப்பீர்! ஆதரிப்பீர் தாயுள்ளத்தை.**

**வலிவான இந்தியாவிற்கும்-வளமான தமிழகத்திற்கும்**

**ஆதரிப்பீர்**

# இரட்டை இலை - கைச் சின்னம்

- மெய்க்கீர்த்தி

## நாடெங்கும் பிரார்த்தனை...

(முதற்பக்கத் தொடர்ச்சி)

ஆலயம், மற்றும் மசூதியிலும் பிரார்த்தனை செய்தனர்.

### தேனாம்பேட்டை

தேனாம் பேட்டையில் உள்ள எல்லையம்மன் கோவிலில் ஆர். வி. கே. அப்பாசாமி. ரவிச்சந்திரன் தியாகராஜன், வசந்தா, மீரா, ராணி, மற்றும் ஏராளமானோர் சென்று முதல்வர் நலம் பெற வழிபாடு நடத்தினர்.

### குமரியில் அமைச்சர் ஆர். எம். வீ.

கன்னியாகுமரி மாவட்டத்தில் முதல்வர் புரட்சி தலைவருக்காக பல்வேறு ஆலயங்களில் சிறப்பு வழிபாடு நடைபெற்றது.

கன்னியாகுமரி பகவதி அம்மன் ஆலயத்திலும் சுசீந்திரம் கோயிலிலும், நாகர் கோயில் நாகராஜா கோயிலிலும், திருவெட்டாறு ஆதிகேசவ பெருமாள் கோயிலிலும், மருதூர் சுப்பிரமணியசுவாமி கோயிலிலும் விசேஷ வழிபாடு நடந்தது.

கன்னியாகுமரி பகவதியம்மன் கோவிலில் அமைச்சர் ஆர், எம். வீ. கலந்து கொண்டு சிறப்பு வழிபாடு நடத்தினார்.

### மதுரையில் அமைச்சர் காளிமுத்து

மதுரையில் அமைச்சர் காளிமுத்து தலைமையில் ஆயிரக்கணக்கானோர் செயின்ட் மேரிஸ் சர்ச்சிலும், முனிச்சாலை மசூதியிலும், தெப்பக்குளம் மாரியம்மன் கோயிலிலும் முதல்வர் புரட்சித்தலைவர் விரைவில் பூரண நலம் பெற சிறப்பு வழிபாடு நடைபெற்றது.

மதுரை பெத்தானியாபுரத்தில் உள்ள சித்தி விநாயகர் கோவிலில் தமிழ் நாடு கராத்தே அசோஸியேஷன் சார்பில் முதல்வருக்காக சிறப்பு வழிபாடுசெய்யப்பட்டது.

### திருப்பரங்குன்றம்

மதுரை மீனாட்சியம்மன் கோவிலிலும் திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சுவாமி கோவிலிலும் முதல்வர் புரட்சித் தலைவர் நலம் பெற சிறப்பு வழிபாடு நடத்தினர்.

### வடபழனி

சென்னை வடபழனி முருகன் கோவிலில் முதல்வர் புரட்சித்தலைவர் விரைவில் பூரண நலம் பெற 'அண்ணா' நாளிதழ் சார்பிலும் சென்னை மாவட்டக் கழக துணைச் செயலாளர் கு. க. செல்வம் சார்பிலும் சிறப்பு வழிபாடு நடைபெற்றது.

இந்த வழிபாட்டில் அண்ணா நாளிதழ் ஆசிரியர் கார்க்கி, கு. க. செல்வம், வேட்பாளர் சவுரி ராஜன், மு. சக்தி, மதிவாணன், சுந்தரம், ஏழுமலை, சச்சிதானந்தம், போஸ், அண்ணா மேலாளர் ஜி. எம். சுந்தரம், சிவா, ஆசிரியர் குழுவினர் ரங்கநாதன், ராஜமாணிக்கம், விளம்பரப் பிரிவு ஏ. பி. பத்மநாபன், துர்கா அம்மாள், மற்றும் மணிமாறன் இவர்களுடன் ஏராளமான ஊழியர்களும் பங்கு பெற்று வழிபட்டனர்.

தமிழ்நாடுமாநிலவாணிபக் கழக அண்ணா பாரம் தூக்கும் தொழிலாளர் சார்பாக பாலபிஷேகம் நடைபெற்றது. ஜெயராமன், அய்யனார், நாகலிங்கம், செல்வக்குமார், கணேசன், செல்வமுத்து, சுப்பராயலு ஆகியோர் விஜயராகவபுரம் அம்மன் கோவிலில் இருந்து பால்குடம்சுமந்து வந்து வடபழனி முருகனுக்கு பாலபிஷேகம் செய்தனர்.

### தி. நகரில் மவுனவிரதம்

தியாகராய நகர் பகுதியில் தி. நகர்மூர்த்தி தலைமையில் சிவாவிஷ்ணு ஆலயம் முன்பு காலை முதல் மாலை வரை நூற்றுக்கணக்கான ஆண்களும் பெண்களும் உண்ணா நோன்பும் மவுன விரதமும் இருந்தனர்.

இதில் சாமிநாதன், நடராசன் ஆறுமுகம். காளிதாஸ், ஆகியோர் முன்னிலையில் நடைபெற்ற உண்ணா நோன்பு மவுன விரதத்தை குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வமும், கு. க. செல்வமும் முடித்து வைத்தனர்.

## ஆபரேஷன் வெற்றி...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

சேர்ந்த நர்சுகள், டாக்டர்கள் சிலர் புரூக்ளின் மருத்துவ மனையில் உள்ளனர்.

அவர்கள் அப்பல்லோ மருத்துவமனை தலைமை டாக்டர் பிரதாப் ரெட்டியுடன் பேசுகையில், முதல்வர் ஆபரேஷனுக்கு பிறகு நலமாக உள்ளார். இன்னும் ஒன்று அல்லது 2 வாரங்களில் தமிழகமுதல்வர் தமிழகம் திரும்புவார்எனக் கூறினார்கள்.

சென்னை பொதுமருத்துவமனை நரம்பியல் நிபுணர்கள் டாக்டர் ஜெகந்நாதன், டாக்டர் ரவீந்திரன் முதல்வரின் தனிமருத்துவர் பி. ஆர். சுப்பிரமணியம் ஆகியோர்ஆபரேஷன் போது உடனிருந்தனர்.

ஆபரேஷன் நடந்த போது முதல்வர்புரட்சித் தலைவரின் துணைவியார் ஜானகிஅம்மையார்தனிச் செயலாளர் பரமசிவம் ஆகியோர் மருத்துவ மனையில் இருந்தனர்.

மாற்றுசிறுநீரகம்பொருத்தப்பட்டு விட்டதால் இனி முதல்வர் புரட்சித்தலைவருக்கு ரத்த சுத்திகரிப்பு சிகிச்சை (டயாலிசிஸ்) செய்ய தேவை இல்லை,

சென்னை நகர

## புது ஷெரீப்

சென்னை, டிச. 20 - சென்னை நகர புது ஷெரீப்பாக ஆற்காடு நவாபின் மகன் முகமது அப்துல்அலி நியமிக்கப்பட்டுள்ளார். இவர் ஓராண்டு இப்பதவியை வகிப்பார்.







தலைமைக் கழக அறிக்கை எண்: 185-84

### தென்னாற்காடு மாவட்ட கழகத் தோழர்களுக்கு...

கழகத்தில் இருந்து நீக்கி வைக்கப்பட்டிருந்த திண்டிவனம் நாடாளுமன்ற முன்னாள் உறுப்பினர் வேணுகோபால்

தனது செயலுக்கு வருந்தி நேரிலும் தபால் மூலமும் விடுத்த வேண்டுகோளினை ஏற்று இன்று முதல் கழகத்தில்இணைந்துபணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

இவ்வறிவிப்பு பொதுச்செயலாளர் திருமிகு ப.உ.ச. அவர்களின் அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

**சத்தியவாணிமுத்து.**
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
20-12-84

# தேர்தல் களம்

# தஞ்சை மாவட்டத்தில் கழக கூட்டணிக்கு அமோக வெற்றி உறுதி

## தொகுதி நிலவரம்

(நமது சிறப்புச் செய்தியாளர்)
ஜி. கண்ணன்

தஞ்சை மாவட்டம் "எப்போதும்வென்றான்" புரட்சித் தலைவரின் கோட்டையே என்று மீண்டும் நிரூபிக்கிறது!

தஞ்சை மாவட்டத்தில் புரட்சித் தலைவரின் அன்புத்தம்பி டாக்டர் நாவலர் சூறாவளிச் சுற்றுப்பயணம்செய்தார்.

பேராவூரணி தொகுதியில் பெருமகளூரில்நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் கழக சட்டமன்ற வேட்பாளர் அமைச்சர் கோவேந்தனுக்கு இரட்டை இலைச்சின்னத்திலும், நாடாளுமன்றகழக கூட்டணி வேட்பாளர் சுந்தரராஜனுக்கு 'கை' சின்னத்திலும்வாக்களிக்க மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

பேராவூரணி தொகுதியில் பேராவூரணி, குருவிக்குளம், பெருமகளூர் ஆகிய நகரங்கள் தவிர மற்ற எல்லாம் கிராமப் பகுதிகள்.

இத்தொகுதியில் ஒரு லட்சத்து 50 ஆயிரம் வாக்காளர்கள் இருக்கிறார்கள்.

இதில் சுமார் ஒரு லட்சத்து 20ஆயிரம் வாக்குகள் பதிவாகலாம்.

இத்தொகுதியில் திமுக. கூட்டணியில் நிற்கும் கம்யூனிஸ்டுக்கு மக்கள் ஓட்டளிப்பது இல்லை என்று முடிவு செய்திருக்கிறார்கள்.

தி.மு.க. வின்ஓட்டைப் பெறுவதற்கு சுயேச்சை ஒருவரும் போட்டியிடுகிறார்.

இந்த தொகுதியில் கழக வேட்பாளர் அமைச்சர் கோவேந்தன் 72 ஆயிரம் வாக்குகள் பெற்று வெற்றி பெறுவது உறுதியாகி விட்டது.

### தி.மு.க. கற்பனை!

தஞ்சை மாவட்டம் என்றாலே தான் தான் என்று கற்பனைக் கோட்டையில் மிதந்தவர்களின் நிலை, பட்டுக்கோட்டையிலேயே கலகலத்து விட்டது.

புரட்சித் தலைவரின் கூடவே இருந்து நவீன புருட்டசாக மாறியவருக்கு ஓட்டு போடுவதில்லை என்று பட்டுக்கோட்டை மக்கள் முடிவு செய்துவிட்டார்கள்

இரவு 10. 45 மணிக்கு நாவலர் பேசத் துவங்கினார். அதிகாலை 2 மணிக்கு அவர் பேச்சை முடித்தபோது, மக்கள் அப்படியே அமர்ந்திருந்து நாவலரின் உரைகேட்டு மகிழ்ந்தனர்.

புரட்சித் தலைவரைப் பற்றி தி.மு.க.வினர் வதந்தி கிளப்ப இருக்கிறார்கள். அதற்கானசதி திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்றும், வானொலியையும் நல்ல தரமான பத்திரிகைகளையும்மட்டுமே நீங்கள் நம்புங்கள். தேர்தல் பணிகளை சுணக்க, வதந்தி பரப்புவார்கள் நம்பாதீர்கள் என்றும் நாவலர்கூறினார்.

தஞ்சை மாவட்டத்தில் திருவிடை மருதூர், ஆடுதுறை, திருவையாறு திருவாரூர், வலங்கைமான் சீர்காழி, பூம்புகார், மயிலாடுதுறை, ஒரத்தநாடு, கும்பகோணம், நன்னிலம் திருவோணம், பட்டுக்கோட்டை, தஞ்சாவூர், கும்பகோணம், பாபநாசம், குத்தாலம், திருத்துறைப்பூண்டி, நாகப்பட்டினம், மன்னார்குடி ஆகிய சட்டமன்றத் தொகுதிகள் உள்ளன.

இவற்றில் குறைந்த பட்சம் 15 தொகுதிகள் கழகக் கூட்டணிக்கு கிடைப்பது உறுதியாகி விட்டது.

### தீவிர பிரச்சாரம்

தஞ்சையில் டாக்டர் நாவலர்சூறாவளியயணம் மேற்கொண்டதால் ஒரத்தநாடு, வலங்கைமான், சீர்காழி, திருவாரூர் நன்னிலம்போன்ற தொகுதிகளில் தேர்தல் பணிகள் சூடுபிடித்திருக்கிறது.

புரட்சித் தலைவர் அமெரிக்காவில் சிகிச்சை பெற்றுவருவது பற்றிய 'வீடியோ' படச்சுருள், தஞ்சை மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் பொதுமக்களுக்கு காட்டப்படுவதால், இதுவரை திமுக கும்பல் பரப்பிவந்த பொய்ப்பிரச்சாரம் தூள் தூளாகி விட்டது,

### தி. மு. க மீது மக்கள் வெறுப்பு

நல்லவர் ஒருவரைப் பற்றி நயவஞ்சகர்கள் இல்லாததும் பொல்லாததும் கிளப்புவது கண்டு மக்கள் வெறுப்பும் மன வேதனையும்அடைந்திருக்கிறார்கள்.

தஞ்சை மாவட்டத்தில் விடிய, விடியத் தேர்தல் பிரச்சாரம் செய்த டாக்டர் நாவலர் ஆங்காங்கு கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான மக்களிடையே பேருரை யாற்றினார்.

மத்தியில் நிலையான ஆட்சி - இந்திரா காங்கிரஸ் ஆட்சி ஏன் தொடர வேண்டும் என்பது பற்றியும் புரட்சித்தலைவரின் நல்லாட்சியில் இதுவரை தமிழகம் பெற்று வந்துள்ள நன்மைகளையும் விளக்கி நாவலர் எடுத்துரைத்தார்.

கருணாநிதிஆட்சிகாலத்தில் தஞ்சை மாவட்டத்து விவசாய தொழிலாளர்கள் எந்தவித நன்மையும் பெறாமல் துப்பாக்கிச் சூடும், குண்டாந்தடியடியும் பெற்றவைகளை மறக்கவில்லை.

அன்றைக்குஅடிவாங்குவதற்கு தங்களை பயன் படுத்திக்கொண்ட கம்யூனிஸ்டு கட்சிகள் இன்று துரோகி கருணாநிதியுடன் கூட்டு சேர்ந்து கை கோர்த்துவருவது கண்டு கொதிப்படைந்துள்ளனர்.

தஞ்சை மாவட்டம் என்றைக்கும் மாமன்னர் ராஜராஜ சோழன் வழி நின்றுநீதியைநேர்மையை நிலை நாட்டும். அந்த வகையில் நீதி தேவன் புரட்சித்தலைவரைத் தான் பின் பற்றும்என்பது உறுதியாகி விட்டது.

தேசிய இயக்கத்தின் தூண்களெல்லாம் உருவான இடம் தஞ்சை மாவட்டம் என்பதால் தஞ்சை மாவட்ட மக்கள் கழகம் - இந்திரா காங்கிரஸ் கூட்டணியின் பின் நிற்கிறார்கள்.

தஞ்சை மாவட்ட மக்களின் மனஉறுதி கண்டு, திமுக கும்பல் ஆங்காங்கே கலவரங்களை உருவாக்கி விவசாயத் தொழிலாளர்களை ஓட்டு பதிவு செய்ய விடாமல் தடுக்கும் முயற்சிகளில் ஈடுபட்டிருக்கின்றனர்.

தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவரும் காவல் துறையும், அனைத்து விவசாய தொழிலாளர்களும் எல்லாமக்களும் வாக்கு பதிவு செய்யும் வகையில் சிறப்பான பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்து வருகின்றனர்.

## அமைச்சர் அண்டே நிகழ்ச்சிகள்

சென்னை, டிச. 20-

டிச.21-காலை புரசை தொகுதிசிவசண்முகபுரம். 41-வது வட்டம்-நம்மாழ்வார்பேட்டை, பொன்னுவேல்புரம் கொடிஏற்றுவிழா ஞானாம்பாள்தெருபொதுக்கூட்டம்-இரவு 8-மணி ஆயிரம் விளக்கு பொதுக்கூட்டம். 9 மணி:- குரோம்பேட்டை கூட்டம் 10 மணி பல்லாவரம் கூட்டம்

22ந் தேதி காலை முதல் மாலை வரை துறைமுகத் தொகுதியில் திறந்த ஜீப்பில் வாக்காளர்களை சந்தித்தல்.

8ம் பத்தி தொடர்ச்சி

றேன். இரண்டு நாளில் வர இருக்கும் வீடியோ படத்தில் புரட்சித் தலைவர் எழுந்து நடந்துவரும் கண்கொள்ளாக் காட்சியை நாமெல்லாம் கண்டு மகிழப் போகிறோம்.

ஆனால்அதைக் கருணாநிதி பார்த்து பைத்தியம் பிடித்துஅலையும்நிலைக்கு ஆளாகப்போகிறார்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ.பேசினார்.

## திருச்செந்தூர் 'வேலை' மட்டுமல்ல அண்ணா நகரும் இனி நடக்காது!

தோல்விக்கு இப்போதே காரணம் கண்டுபிடிக்கத் தொடங்கி விட்டது மு. ஒலி.

"திருச்செந்தூர் வாக்கு எண்ணிக்கை - திருச்செந்தூர் வேலை" -என்று குமுப்பியிருக்கிறது மு. ஒலி.

திருச்செந்தூரில் நடந்ததுஎன்ன? வாக்கு எண்ணிக்கைக்கு சம்பந்தப் படாத தி. மு. க. பெண்மணிஒருவர் ஓட்டுக்கட்டுக்களை ஒட்டு எண்ணப்பட்ட மேடையிலிருந்து கீழே தூக்கிப் போட்டுவிட்டார்.

மு. ஒலியே.. அந்த திருச்செந்தூர் வேலை இனி நடக்காது.

அதுமட்டுமல்ல...

கருணாநிதி தோற்றுப்போவார் என்று தெரிந்ததும் தேர்தல் அதிகாரியே ஓட்டுக்கட்டுக்களை மறைத்து மோசடி செய்தாரே..

அந்த 'அண்ணாநகர்வேலையும்' இனி நடக்காது!

கவலை வேண்டாம்!

-மெ. கி.

## சென்னை நகரில் பெருவாரி இடங்களை கழகஅணிகைப்பற்றும்

### அமைச்சர் ஆர். எம். வீ. உறுதி



சென்னை, டிச. 20- சென்னை நகரில் பெருவாரியான தொகுதிகளை கழக அணி கைப்பற்றும் என்று அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

இங்கே இந்தப் பூங்கா நகர்த் தொகுதியில் தி மு. க. வின் பொதுச் செயலாளர் அன்பழகன் போட்டியிடுகிறார். அவரை எதிர்த்துகாங்கிரஸ்சார்பாக இளைஞர் ஜோதி போட்டியிடுகிறார்.

சென்றமுறை புரசை தொகுதியில் வலம்புரி ஜானிடம் வகையாகச் சிக்கிக் கொண்டு தப்பித்தார். இப்பொழுது பாதுகாப்பான தொகுதி என்று கருதி பூங்கா நகர் தொகுதியில் போட்டியிடுகிறார்.

80ம் ஆண்டு தேர்தலில் அதிகமான வாக்கு வித்தியாசத்தில் தி. மு. க. வென்ற தொகுதி என்று தப்பான கணக்கைப் போட்டுஅன்பழகனைபலிகடாவாக்கி விட்டார் கருணாநிதி.

கருணாநிதி மிகச் சாமர்த்தியசாலி, தன்னிடம் சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கும் அன்பழகனை எப்படியாவது பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்தில் இந்தத் தொகுதியில் அவரை போட்டியிடச் செய்துள்ளார்.

### காலத்தின் கட்டளை

இன்றைக்கு தேர்தல் களத்தில் இறங்கியுள்ள கருணாநிதி என்னை மன்னியுங்கள் என்கிறார். தண்டனை கொடுத்துபோதும், செருப்பாய் இருக்கிறேன் என்கிறார். ஏன் இந்த நிலை கருணாநிதிக்கு?

முன்பு முதல்வர் பதவியை உங்களுக்கு தந்தவரே புரட்சித் தலைவர் தானே.

அந்த நன்றியை மறந்ததால்தானே வெளியே தூக்கி யெறியப்பட்டிருக்கிறீர்கள்.

நல்லவேளை புரட்சித் தலைவர் நமக்குக்கிடைத்தார், திராவிட இயக்கம் காப்பாற்றப்பட்டது.

புரட்சித்தலைவர் படுத்துக் கொண்டே ஜெயித்து கருணாநிதியை படுக்க வைக்கப் போகிறார். இதுதான் காலத்தின் கட்டளை,

நமது வாக்குகள் காங்கிரஸ் வாக்குகள், கூட்டணி இயக்கவாக்குகள் நமக்கு கிடைக்க இருக்கிறது. ஜோதி அவர்கள் 10 ஆயிரம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறப்போவது உறுதியாகிவிட்டது.

இன்றைக்கே எழுதி வைத்துக் கொள்ளுங்கள். சென்னையில் மிகப்பெரிய மாற்றம்நிகழஇருக்கிறது. சென்னையில் 10 தொகுதிகளில் நமது அணி வெற்றி பெறுவது உறுதியாகிவிட்டது.

### நிலைமை அதுதான்

இரண்டு தொகுதிகளில் நமக்கு சாதக நிலை உள்ளது. நாமெல்லாம் மிகக் கடுமையாக உழைத்தால் அதையும் மாற்றிக்காட்டலாம்.

இந்திய நாடெங்கும் உள்ளநிலையையும், தமிழக நிலையையும் தெரிந்துதான் இருக்கருத்தை கூறுகிறேன்.

இந்தியாவில் இந்திரா காங்கிரசைத் தவிர வேறுஎந்தஇயக்கம் ஸ்திரமாகஉள்ளது?, இன்றைக்கு அன்னைஇந்திராஇல்லை. ஆனால் அவர் விட்டுச் சென்றகொள்கைஉள்ளது. அந்தகொள்கையை கட்டிக் காக்கும் திறமை பிரதமர் ராஜீவிடம்தான் உள்ளது.

வேறு எந்த இயக்கத்திலும்அடையாளம்தெரிந்த அரசியல்வாதிகள் இல்லை,

மத்தியில் ராஜீவ்காந்தி பிரதமராக வரப்போவது உறுதி. அதுபோல தமிழகத்தில் புரட்சித்தலைவர் ஆட்சிக்கட்டிலில் அமரத்தான் போகிறார்.

தனது ரத்தத்தை சிந்தி நாட்டிற்கு அர்ப்பணித்து மறைந்த அன்னை இந்திராவை எவ்வளவு இழிமொழிகள் பேசினார் கருணாநிதி.

### நன்றி மறந்த கருணாநிதி

வழக்கு வாபஸானதும் நன்றி மறந்து நமது அன்னைக்கு எதிராகச் செயல்பட்டவர்தான் இந்தக் கருணாநிதி அந்த நன்றி உணர்வு இல்லாத காரணத்தினால்தான் அவரது மறைவிற்கு டெல்லி சென்று ஒருமலர் வளையம் வைக்கக்கூட மனம் வரவில்லை,

ஆனால் ஊரை ஏமாற்ற ரேடியோவிலும் தொலைக்காட்சியிலும் புலம்புகிறார்.

நாட்டுமக்கள் உங்களை நன்றாகப்புரிந்து கொண்டு விட்டார்கள். 77ம் ஆண்டு முதல் உங்களைபுரிந்து கொண்டதால் தானேஉள்ளேஅனுமதிக்க மறுக்கிறார்கள் மக்கள்?

இங்கே போட்டியிடும் அன்பழகனே கருணாநிதியை ஏற்றுக்கொண்டவரா? கருணாநிதி முதல்வராவதை என் மனைவி கூட ஏற்றுக்கொள்ளமாட்டாள் என்றவர்தான்இந்த அன்பழகன்.

அதன் பின் நேருவின் மகளே வருக, நிலையான ஆட்சி தருக என்று கூறி தன்மேலிருந்தவழக்குகளை வாபஸ் வாங்கச் சொன்னார்.

### போர்க்களத்தில் ஒப்பாரி

இன்றைக்கு நான் செருப்பாய் இருக்கிறேன் என்று கெஞ்சுகிறார் கருணாநிதி.

போர்களத்தில் ஒப்பாரி ஏன்? களத்தில் இறங்கி விட்டீர்கள் அப்புறம் என்ன மன்னிப்பு?

எதிர்க்கட்சியாகக் கூட லாயக்கில்லை என்று மக்கள் புறக்கணித்தும், ஆட்சிக்குவரத்துடிக்கிறீர்கள். நாடாளுமன்றத் தேர்தலில் இ. காங்கிரஸ் தயவால் 16இடங்களைக் கைப்பற்றினீர்கள் இந்த முறை உங்கள் ஜம்பம் சாயாது.

எங்கள் தானைத்தலைவர, தளபதி களத்தில் இல்லை. ஆனாலும் நாங்கள் செய்த சாதனைகளைச் சொல்லி வாக்குக்கேட்கிறோம். ஆனால் கருணாநிதியோ, புரட்சித்தலைவரைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கிஉள்ளார். வீடியோ படம் மூலமாக புரட்சித் தலைவரின் நிலையை காண்பித்துக் கொண்டிருக்கிறோம்.

இன்னுமொரு மகிழ்ச்சியான செய்தி சொல்லுகி

3-ம் பத்தி பார்க்க

ஆலந்தூர் தொகுதி கழக வேட்பாளர் இரா. மோகனரங்கம் வாக்கு கேட்டபோது மக்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றனர்.



கழக முற்போக்கு கூட்டணியை ஆதரித்து தடிகா தலைவர் சிவாஜி கணேசன் எம்.பி. உரையாற்றிய கூட்டத்தின் ஒரு பகுதி.

# வாக்களியுங்கள்

ஒற்றுமைக்கு

சட்டம்-ஒழுங்கிற்கு

சமத்துவத்திற்கு

இலட்சிய நோக்கிற்கு

வலிமைக்கு

வளமைக்கு

வளர்ச்சிக்கு

முன்னேற்றத்திற்கு



## வாக்களியுங்கள் இ.காங்கிரசுக்கு

## அமெரிக்கா வந்து புரட்சித்தலைவரை சந்திக்க கருணாநிதி தயாரா?

# என்றென்றும் மக்கள் ஆதரவு புரட்சித்தலைவருக்கே

### திரைப்பட இயக்குனர் பாக்கியராஜ் முழக்கம்

## முதல்வராக அமெரிக்கா சென்ற புரட்சித்தலைவர் முதல்வராகவே திரும்பி வருவார்

**சென்னை, டிச. 20- என்றென்றும் மக்கள் ஆதரவு புரட்சித்தலைவர் பக்கமே உள்ளது. முதல்வராக அமெரிக்கா சென்ற புரட்சித்தலைவர் முதல்வராகவே திரும்பி வருவார் என கழகத் தேர்தல் பிரச்சாரக்கூட்டங்களில் இயக்குனர் பாக்கியராஜ் கூறினார்.**

சென்னை ஆயிரம் விளக்கு மாடல்பள்ளி சாலைஅருகிலும், புரசைவாக்கம் வி.பி.காலனியிலும், சைதைத் தேரடி திட்லிலும் நடைபெற்ற பிருமாண்டமான கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில்பங்கேற்று இயக்குனர் பாக்கியராஜ் பேசினார்.

''முருகா'' என்று கூறி ''மைக்''கைத் தொட்டு வணங்கினார்.

''பட்டப்பிடிப்பு''தொடங்கும்போது கேமராவை கும்பிடுவோம். முதல் முதலாக அரசியல் பேசப் போகிறேன்- அதனால்தான் ''மைக்கைத் கும்பிடுகிறேன்'' என்று சொல்லிபேச்சைத் தொடர்ந்தார்.

அவர் கூறியதாவது:-

தி. மு. க. தலைவர், முன்னாள் முதல்-அமைச்சர் கருணாநிதியின் உடன் பிறப்புகளுக்கு என் முதல் வணக்கம்விருந்தாளிகளுக்குத்தான்முதலில்வணக்கம் சொல்லவேண்டும்.

புரட்சித்தலைவரின் ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புக்களே! நான் அமெரிக்காசென்றுவிட்டுவந்துள்ளேன். அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளை நண்பர் டி. ராஜேந்தர் முன்கூட்டியே சொல்லிவிட்டார். நான் அங்கு போனால் என்ன நடக்கும்என்றுஅவருக்குத்தெரியும்.

நான் அரசியலில் ஈடுபடமாட்டேன் என்று2 மாதத்திற்கு முன்னால் சொன்னேன்.

சின்ன வயதில் ''அரசியல் என்றால் நிறைய பொய் சொல்லவேண்டும், எதிரிகளை திட்டிப் பேசவேண்டும்'' என்றுநினைத்தேன்.

ஆனால் இப்போது அரசியலுக்கு வந்து இருக்கிறேன் என்றால், பொய் சொல்லவும், திட்டவும் பழகிவிட்டேன் என்று அர்த்தம் அல்ல.

சின்ன வயதில் அப்படி நினைத்தேன். ஆனால் இப்போது உண்மையைப் புரிந்து கொண்டேன். டாக்டர் தப்பு செய்தால் ஒரு உயிர் போகும். வக்கீல் தவறு செய்தால் ஒரு உயிர்தான் போகும். என்ஜினீயர் தவறு செய்தால் 100 உயிர் போகும் ஆனால் அரசியல் வாதி தவறு செய்தால் நாடே ''அவுட்.''

### கடமையை செய்கிறேன்

அரசியல் பொறுப்பான சமாசாரம். அதற்கு அறிவு, வயது முக்கியம்.

இப்போது நான் அரசியலில் ஈடுபட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. முதல்வர் புரட்சித்தலைவர் எனக்கு எவ்வளவோ உதவிகள் செய்தார், அவர்உடம்பு சரியில்லாமல் இருக்கும் இந்த நேரத்தில் என் கடமையைச் செய்தாக வேண்டும்.

போன தேர்தலில் நான் ஏன் ஈடுபடவில்லை என்றால், அதற்கு காரணம் உண்டு. முதல்வர் என்னை அழைத்து 'உன் படத்தை எல்லோருமே பார்க்கிறார்கள். உனக்கு வயது கம்மி. தொழிலில் முன்னேறவேண்டும். நான் அழைக்கும்போது அரசியலுக்கு வந்தால் போதும்' என்று சொன்னார்.

அவர் நேரில்வந்துஏதாவது கேட்டால் என்ன செய்வது என்று கருதித்தான். புரட்சித்தலைவரை நேரில் சந்தித்து சம்மதம் பெற்று அவர் ஆசீர்வாதத்தோடு வந்துள்ளேன்,

நண்பர் டி. ராஜேந்தர் (அப்போது கூட்டத்தினர் ''கரடி, கரடி'' என்று கோஷம் போட்டனர். அதற்கு பாக்கியராஜ்'' ''யாரையும் திட்டக்கூடாது'' என்றார். அவருக்கு போட்டியாக என்னை தயார் செய்வதாக கூறியுள்ளார்.

அவருக்கு நாகரிகமான முறையில் பதில் சொல்ல நினைக்கிறேன். யார் அந்தக்கருணாநிதி என்று நான் பேசமாட்டேன். கருணாநிதியின் வயது என்ன? அனுபவம் என்ன? அவர் அறிவாளி, திறமைசாலி.

புரட்சித் தலைவரை தவிர வேறு யாராக இருந்தாலும், கண்ணில் விரலைவிட்டு ஆட்டிஇருப்பார் கருணாநிதி.

### கொள்கையை பேசுங்கள்

ஜெயலலிதா பற்றி பேசுகிறார்டி.ராஜேந்தர். கொள்கைகளைப் பற்றிப் பேச வேண்டுமே தவிர தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றி விமர்சிக்கக் கூடாது. நம் வீட்டிலும் அம்மா, அக்கா, மனைவி என டாட்டி இருக்கிறார்கள். கருத்தோடு கருத்து மோத வேண்டும்.

நானும்தான்முருங்கைக் காய் சமாசாரத்தை சொன்னேன். ''சபாஷ் போட்டார்கள் கை தட்டல் பெற வேண்டும் என்பதற்காக எதையும் பேசிவிடக் கூடாது.

புரட்சித்தலைவர் அமெரிக்காவில் எடுத்த போட்டோ எல்லாம்'டுப்' 'செட்டப்' என்கிறார் ராஜேந்தர். அமைச்சர் ஹண்டேவுக்கு 'எக்ஸ்ரே' தான் எடுக்கத்தெரியும். 'டிரிக் ஷாட்' எல்லாம் எடுக்கத் தெரியாது.

நான் அமெரிக்காவுக்கே போகவில்லை. பம்பாய் போய்விட்டு வந்ததாக சொல்கிறார்கள். அதற்காக நான்'வீடியோ போட்டோ எதுவும் வைத்திருக்கவில்லை.

எனக்கு விமானத்தில் போவதுஎன்றாலேபயம். அப்படிப்பட்டவன் அமெரிக்காவில் உடல்நலம் இல்லாமல் முதல்வர் இருக்கும்போது என்உயிர் முக்கியமா என்றுதான் போனேனே தவிர பம்பாய், கோவா என்பதில் அர்த்தமில்லை.

### என்னோடு வரத் தயாரா?

நானும் ஒரு துருப்புச்சீட்டு வைத்திருக்கிறேன். அமெரிக்கா செல்வதற்கு 3 டிக்கெட் எடுத்துவைத்து இருக்கிறேன். ஒன்று எனக்கு. இன்னொன்று கருணாநிதி. மூன்றாவது டிக்கெட் நீதிபதிக்கு, நாளையோ நாளை மறுநாளோ புறப்படத் தயார்.

ஒருவேளை ''பிரசாரத்தில் ஈடுபட்டு இருக்கிறேன்'' என்று கருணாநிதி சொல்லாம், 22- ந் தேதி 4மணிக்கு பிரசாரம் முடிந்துவிடும். 22- ந் தேதி இரவே புறப்படுவோம். 23-ந் தேதி மாலை 4மணிக்குநியூயார்க்போய் சேர்ந்து விடலாம். புரட்சித்தலைவரை இருக்கும்ஆஸ்பத்திரி போக ஒரு மணி நேரம். அதாவது மாலை 5 மணிக்கு போய் விடலாம்.

அரை மணி நேரம் அங்கு இருப்போம் அவர் உங்களைக் கும்பிடுவார். உங்களுக்கு நாற்காலி எடுத்து போடச் சொல்வார். உங்களுக்கு காபி கொடுக்கச்சொல்லுவார். வாசல் வரை வந்து உங்களை வழி அனுப்பி வைப்பார் அப்படிச் செய்தால் உடனே 5½ மணிக்கு நீதிபதி தமிழகத்திற்கு போன் செய்யவேண்டும். அத்தனை வேட்பாளர்களையும் வாபஸ் வாங்கவேண்டும்.

கருணாநிதிக்கு இதை சவாலாக சொல்லவில்லை போட்டோ பொய் என்று சொல்லும்போது நேராகப் போய் பார்த்துவிடலாமே. அதற்காக சொல்கிறேன். டிக்கெட் எடுத்து வைத்துள்ளேன் அவர் தயாரா?

தமிழக மக்கள் மீது புரட்சித்தலைவர் நம்பிக்கைவைத்துஇருக்கிறார். புரட்சித் தலைவர் நம்பிக்கையோடுஇருக்கிறார்.

அவர் நல்லவர் இங்கு வந்து நல்லதையே செய்வார். அவர் சம்பாதித்த காசுகளையும் மக்களுக்கே வழங்குவார்.

ஜனவரி மாதம்புரட்சித்தலைவர் வந்து இறங்குவார். அவரை முதல்-அமைச்சராக வரவேற்க வேண்டும். என்றென்றும் மக்கள் ஆதரவு புரட்சித்தலைவர் பக்கமே என்பது உறுதி.

அமைச்சர் கே. ஏ. கே. அனுபவசாலி. ஆயிரம் விளக்கு கோட்டையை அவரிடம் ஒப்படைப்போம்.

''பிரதமர்பதவி ராஜீவ் காந்திக்கு என்ன பரம்பரை சொத்தா?'' என்று கேட்கிறார்கள். பெண் வயது வந்தால் மாப்பிள்ளை பார்ப்பார்கள். அப்போது மாப்பிள்ளையைப் பார்ப்பதை விட பூர்வீகத்தையே பெரியவர்கள் ஆராய்வார்கள். அதைப்போலவே ராஜீவ்காந்தி, மோதிலால் நேரு, நேரு, இந்திரா என்ற பாரம்பரியம் உள்ளவர். எனவே அவருக்கு ஆதரவு அளிக்க வேண்டும்.

இவ்வாறு பாக்கியராஜ் பேசினார்.

### இனவெறிப் பிரச்சாரத்திற்கு உங்கள் பதில் என்ன?

வீட்டில்....

தெலுங்கு பேசுவோர்...
கன்னடம் பேசுவோர்...
உருது பேசுவோர்...
சவுராஷ்டிர மொழி பேசுவோர்...
மலையாளம் பேசுவோர்...

அனைவரும் தங்கத் தமிழரே!
இது புரட்சித்தலைவரின் குரல்!

வீட்டில்...

தெலுங்கு பேசுவோர்...
கன்னடம் பேசுவோர்...
உருது பேசுவோர்...
சவுராஷ்டிர மொழி பேசுவோர்...
மலையாளம் பேசுவோர்...
-வீட்டில் பிறமொழி பேசுவோர்...

தலைமுறை, தலைமுறையாகத் தமிழ்நாட்டில் வாழ்ந்தாலும், அவர்கள் தமிழர் அல்ல என்கிறார் கருணாநிதி.

ஆன்றோரே! சான்றோரே!!
இந்த இனவெறிப் பிரச்சாரத்திற்கு
**உங்கள் பதில் என்ன?**

### இரட்டை இலை - கைச் சின்னம்



## தேர்தல் களம்

### மோகனரங்கம் வாக்கு சேகரிப்பு

ஆலந்தூர் தொகுதி வேட்பாளர் இரா. மோகனரங்கம் மிக தீவிரமாக வீடு வீடாகச் சென்று ஓட்டுக்களை சேகரித்து வருகிறார். கடந்த ஞாயிற்றுக்கிழமை சாலிகிராமம், எம். ஜி. ஆர். நகர், கே. கே. நகர், ஜாப்பர்கான் பேட்டை, சத்தியா நகர் முதலிய இடங்களில் வாக்குகளை சேகரித்தார்.

கடந்த திங்கட்கிழமை கண்ணன் காலனி, நேரு தெரு, பிச்சன் தெரு, ஆப்மேன்தெரு, மாரிசன்தெரு காவல்துறை வீடுகள் எம். சே. என். ரோடு, ராஜா தெரு, வ. உ. சி. நகர், முதலிய இடங்களில் வீடு வீடாகச் சென்று வாக்குகளைக் கேட்டார். அவருடன் ஆலந்தூர் எஸ் பாலன், ஆலந்தூர் ராதா, ஆலந்தூர் மோகன், முருகேசன், சி. கெங்காதரன், ப. ம, கிருஷ்ணன், டி.என். வேணு, காசிநாதன், கே. வேலாயுதம், பி.கஜேந்திரன், கே. நாராயணன், ரோஸ், சீனிவாசன், மற்றும் பலர் வாக்குகளைச் சேகரித்தனர்.

மயிலாடுதுறை தொகுதி நாடாளுமன்ற, சட்டமன்ற முற்போக்கு கூட்டணி வேட்பாளர்கள் பக்கீர் முகம்மதுவும், தங்கமணியும் ஒன்றியம் முழுவதும் மாப்படுகை, சோழம்பேட்டை, திருமங்கலம், காணி, மணல்மேடு வாக்காளப் பெருமக்களைச் சந்தித்து வாக்குகள் கேட்டார்கள். அப்போது அவர்கள் திருமங்கலம், ஆத்தூர் கடலங்குடி, மணல் மேடு திருவாளப்புத்தூர், நீடூர் ஆகிய முஸ்லிம்கள்வாழும் பகுதியில்பெரியவர்களைச் சந்தித்து வாக்குகள் கேட்டார்கள் முற்போக்குகூட்டணயின் வேட்பாளர்களுடைய வெற்றிக்கு வாழ்த்துக் கூறி ராஜீவ் காந்திக்கும் புரட்சித் தலைவருக்கும் எங்கள் ஆதரவு என்றார்கள், இரவு 9 மணி அளவில் பட்டவர்த்திமகுதஅடியில் நடைப்பெற்ற மாபெறும் பொதுக் கூட்டத்தில் கலந்துக்கொண்டு பொது மக்களிடம் இரட்டை இலைக்கும், கைசின்னத்திற்கும்வாக்குகள்கேட்டுக் கொண்டார்கள். வேட்பாளர்களுடன் எம். எஸ். அபுல் ஹசன் நீடூர் முஸ்தபா, டி.பி. சம்பந்தம், மாப்படுகை முத்தையன், அவைத்தலைவர் ஓ. ஓய். முகமது இசாக், கே. பி. கணேசன் ஆகியோர்சென்றனர்,

## தொலைபேசியில் தேர்தல் முடிவுகள்

இம்மாதம் 28ம் தேதி வாக்குகள் எண்ணப்படுகின்றன. தேர்தல் முடிவுகளைத் தொலைபேசி மூலம் அறிய வசதி செய்யப்பட்டுள்ளது.

**848484 475500**

இந்த நம்பர்களுக்கு போன் செய்தால் தேர்தல் முடிவுகளைத் தெரிவிப்பார்கள்.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publicationsand Printed by All India Anna D. M. K. Perarignar Anna-Trust Press at 34, Nelson Manjokam Road, Madras—600 029.



# ஏழை எளியவர்க்காக

## சரித்திரம் படைப்பது அண்ணாவின் அரசு

### இந்த அரசு மக்கள் அரசு!

எங்களால் ஏழைகள் ஏற்றம் பெற்றிருக்கின்றனர் - எளியவர்கள் முகத்தில் மலர்ச்சி நிழல் படர்ந்திருக்கின்றது. அன்றாடங் காய்ச்சிகளும்- அயராது பாடுபடுபவர்களும் நல்வாழ்வு பெறுவோம் என்று நம்பியிருக்கின்றனர்.

இந்த அரசு வெறும் அதிகார அரசல்ல! ஆணவ அரசல்ல! உழவர்கள் அரசு! உழைத்துப் பிழைக்கும் உழைப்பாளர் கூட்டங்களின் அரசு! மக்கள் அரசு! இந்த அரசுக்கு மக்கள் ஒத்துழைப்பு தேவை.

-பேரறிஞர் அண்ணா



* 1981 முதல் மூன்றாண்டு தொடர்ந்து பருவமழை தவறியபோதும். சென்னையில் தண்ணீர்ப் பஞ்சத்தைத் தீர்க்க. புரட்சித் தலைவரின் அரசு போர்க்கால நடவடிக்கை முறையில் செயற்பட்டது..

ஆழ்துளைக் கிணறுகள், 15
குழாய்க் கிணறுகள், 8779
ஆழ்கிணறுகள் 1,204 அமைக்கப்பட்டன
இரும்புத் தொட்டிகள்) 1,300.
நிறுவப்பட்டு லாரிகள் மூலமாக தண்ணீர் வழங்கப்பட்டது.

* 1982-இல் வரலாறு காணாத வறட்சியினைப் போக்கத் தமிழகம் முழுவதும் ரூ. 46.71 கோடி செலவில் 21,992 ஆழ்துளைக் கிணறுகள் அமைக்கப்பட்டன.

* புரட்சித் தலைவரின் தளராத முயற்சியால், ஒரு நூற்றாண்டுக் கனவு நனவாகியது. சென்னையில் 25.5.1983ல் கிருஷ்ணா நதிநீர்த் திட்டம் தொடங்கப்பட்டது.

* 47 இலட்சத்து 57 ஆயிரம் விவசாயிகள் அரசுக்குச் செலுத்த வேண்டிய கடன் தொகை ரூ. 240 கோடி தள்ளுபடி செய்யப்பட்டது.

* விவசாயிகள், மின்சாரக் கட்டணத்தில் 2 காசு குறைக்குமாறு கேட்டதற்கு முந்தைய அரசு 1972ஆம் ஆண்டு துப்பாக்கிச் சூடு நடத்தி 14 பிணங்களை பரிசாக்கியது.

* ஆனால், புரட்சித் தலைவர் பதவி ஏற்றதும் யூனிட் ஒன்றுக்கு 15 காசு கட்டணம் 12 காசாகக் குறைக்கப்பட்டது.

* 15.9.84 முதல் சிறு விவசாயிகள் ஒரு யூனிட் மின்சாரத்திற்குச் செலுத்திவந்த 12 காசு கட்டணமும் அறவே நீக்கப்பட்டு இலவசமாக மின்சாரம் அளிக்கப்பட்டு வருகிறது. இதனால் பயனடைந்த சிறு விவசாயிகள் 2 இலட்சத்து 38 ஆயிரத்து 347 பேர். இதனால் அரசுக்கு ஆண்டொன்றுக்கு ரூ. 5 கோடியே 79 இலட்சம் இழப்பு.



### உண்டி கொடுத்து உயிர் காக்கின்ற உலகம் பாராட்டும் உயரிய திட்டம்!

* குழந்தைகளே நாட்டின் செல்வங்கள். சத்துணவுக் குறைவால் 8ல் 7 குழந்தைகள் பாதிக்கப்படுகின்றன. ஆகவே ஏழை எளிய மக்களின் நல்வாழ்வையே இலட்சியமாகக் கொண்ட இந்த அரசு, குழந்தைகளின் எதிர்கால நலன் கருதி 1982 ஜூலை முதல் சமுதாயப் புரட்சித் திட்டமான சத்துணவுத் திட்டத்தை நடைமுறைப்படுத்துகிறது.
* சத்துணவுத் திட்டத்தினால் பயன்பெறும் குழந்தைகள் 79.71 இலட்சம்.
* ஆண்டுக்கு ஆகும் செலவு ரூ. 180 கோடி.
* வேலை வாய்ப்புப் பெற்றோர் 1 இலட்சத்து 86 ஆயிரத்து 952 பேர். இதில் பெண்கள் 1 இலட்சத்து 65 ஆயிரத்து 482 பேர். இதில் விதவைகள், கைவிடப்பட்ட மகளிர் 42 ஆயிரத்து 457 பேர்.
* 15.9.1984 முதல், முதியோர், ஊனமுற்றோர், விதவைகள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோருக்கு இலவசச் சத்துணவு அளிக்கப்பட்டு வருகிறது.

* இந்த மாபெரும் சமுதாயப் புரட்சித் திட்டம் வருங்காலத் தலைமுறையினரையும், வயது முதிர்ந்தோரையும் வாழ வைக்கும் திட்டம். இத்தகைய மகத்தான மனிதாபிமானத் திட்டம் தமிழ்நாட்டில்தான் முதன் முதலாகச் செயற் படுத்தப்படுகிறது.

சந்திரனைக் காட்டிச்சோறூட்டுவது சம்பவம்!
இராமச்சந்திரனே
வந்து சோறூட்டுவது சரித்திரம்!

* பெரிய விவசாயிகள் ஒரு யூனிட் மின்சாரத்திற்குச் செலுத்திவந்த 15 காசு கட்டண விகிதம் மாற்றப்பட்டு அவர்கள் உபயோகப்படுத்தும் மோட்டாரின் ஒவ்வொரு குதிரைத் திறனுக்கும் ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் 75 ஆகக் குறைக்கப்பட்டது. இதனால் பயனடைந்தோர் 7 இலட்சத்து 52 ஆயிரத்து 222 பேர்.





# எங்கள் வாக்கு

# ஏழாண்டுப் பணிகள்

## சாதனை புரிவது புரட்சித் தலைவரின் அரசு





**அரிசி விலை ஏறாமல், அனைவரும் பெறுவதற்கு அன்றாடம் உழைப்பது இவ்வரசு !**

* புயல், வறட்சி, வெள்ளம் ஏற்பட்டபோது அரிசி உற்பத்தி 25 இலட்சம் டன்னாகக் குறைந்தபோதும் ஏழை, எளிய வருக்குக் கிடைக்கும் பங்கீட்டு அரிசியின் விலை ஏறாமல் ஒரே சீராக இருக்க வழி செய்தது, புரட்சித் தலைவர் அரசு.
* 1977க்கு முன்னால் இருந்த
  நியாய விலைக் கடைகள் 5,929
  இப்போது உள்ளவை 20,374
* இதுவரை வழங்கப்பட்டுள்ள குடும்ப அட்டைகள் : 1 கோடியே 18 இலட்சத்து 88 ஆயிரம்.
* சென்ற ஆண்டு வெளி மாநிலங்களிலிருந்து கிலோ ரூ. 3.70க்கும் ரூ. 4 க்கும் வாங்கப்பட்டு, நியாய விலைக் கடையில் ரூ. 1.75, ரூ. 2, ரூ. 2.15 என்று விற்கப்பட்டது. இதனால் ஓராண்டில் ஏற்பட்ட இழப்பு ரூ. 67 கோடி.
* 15.9.1984 முதல் 20 கிலோ அரிசி வாங்குகிற குடும்பங்களுக்கு ஒரு கிலோ அரிசி இலவசம்.
* முதியோர் ஓய்வூதியம் பெறும் 2 இலட்சத்து 63 ஆயிரம் பேர், அரிசி வாங்க வேண்டிய அவசியம் இல்லாமல் வாரம் ஒரு கிலோ அரிசியும், மதிய உணவு பெறுகின்றவர்கள் வாரம் அரை கிலோ அரிசியும் இலவசமாகப் பெறுகிறார்கள்.

**அரிசியும் உடையும் வழங்கிய ஆட்சியை ஆதரிப்போம் என்று சொல்லுது தாய்க்குலம் !**

* சுமார் 6 இலட்சம் குடிசைகளுக்கு ரூ. 2½ வீதம் வசூலிக்கப்பட்டு வந்த மின் கட்டணம் 15.9.1984 முதல், அறவே நீக்கப்பட்டுவிட்டது. அத்துடன் எல்லாக் குடிசைகளுக்கும் மின்வசதி இலவசமாக அளிக்கப்பட்டு வருகிறது. இதனால் அரசுக்கு ஏற்பட்டுள்ள இழப்பு ஆண்டொன்றுக்கு ரூ. 95 இலட்சம்.

* ஐந்து ஆண்டுக் காலமாக வேலையில்லாதிருக்கும் பட்டதாரிகளுக்கு மாத உதவித் தொகையாக இந்த அரசால் வழங்கப்பட்ட ரூ. 50, 15.9.1984 முதல் ரூ. 100 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. அத்துடன் எஸ்.எஸ்.எல்.சி. தேர்ச்சி பெற்ற ஏழை மாணவர்களுக்கு ரூ. 50ம் பட்டப்படிப்புக்குக் கீழ்நிலை படித்த மாணவர்களுக்கு ரூ. 75ம் உதவித் தொகையாக வழங்கப்படுகிறது.

* வறட்சிக் கால வேலைவாய்ப்புத் திட்டத்தின் மூலம், 28 இலட்சத்து 20 ஆயிரத்து 500 ஆண்களுக்கு வேட்டிகளும், 33 இலட்சத்து 39 ஆயிரத்து 230 பெண்களுக்கு சேலைகளும் ஓராண்டில் இலவசமாக வழங்கப்பட்டன. இதனால் அரசுக்கு ஏற்பட்ட செலவு ரூ11.55 கோடி.

* மாநில அளவில் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலையும் அவர்களுக்கு அளிக்கப் படும் சலுகைகளையும் சீர்செய்ய இரண்டாவது பிற்பட்டோர் நலக்குழு அமைக்கப்பட்டது.
* நலிந்த பிரிவினர்க்குக் கிராமியக் கூட்டுறவு வீட்டுவசதி சங்கங்கள் மூலம் வீடு கட்டக் கடன் உதவி அளிக்கப்படுகிறது. இதுவரை கட்டி முடிக்கப்பட்ட வீடுகள் 1 இலட்சத்து 59 ஆயிரம்.

* ஏழைகளின் காவலர் எம்.ஜி.ஆர். ஆட்சியில் ஓய்வூதியம் பெறும் முதியவர்கள் 2 இலட்சத்து 63 ஆயிரம் பேர். இவர்களுக்கு மாத ஓய்வூதியம் ரூ. 35ம் ஆண்டுக்கு இரண்டு முறை புதிய ஆடைகளும் வழங்கப் படுகின்றன.
* பிற்பட்ட வகுப்பினருக்குப் பிரதி நிதித்துவம் 50 சதவீதமாக உயர்த்தப் பட்டது.

மக்கள் கொடுக்கும் வரிப் பணம் மக்களின் நல்வாழ்வுக்காகப் பயன் படவேண்டும். மக்களுடன் கூடியிரு; மக்களுடன் பழகு; அவர்களுடன் வாழு; அவர்களுக்காகத் திட்டம் தீட்டிச் செயற்படு. மக்களிடம் நீ போ - செய் என்றெல்லாம் அமரர் அண்ணா அவர்கள் சொன்னார்கள். அதைத்தான் நான் செய்கிறேன்; இந்த அரசு செய்கிறது.

அப்படி பேரறிஞர் அண்ணாவின் கொள்கையை எந்த வகையில் நிறைவேற்ற வேண்டுமோ அந்த வகையில் நிறைவேற்றி வருகிறோம்; வரிப் பணம் எவ்வளவு கிடைக்கிறதோ, அதை மக்களுக்கே செலவு செய்வது தான் எங்கள் பணி !

-மாண்புமிகு முதல்வர்
டாக்டர் எம்.ஜி.ஆர்



புரட்சித் தலைவரின் ஒவ்வொரு திட்டமும் சாதனை என்றது சரித்திர ஏடு!

வெளியீடு :
அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

# இரட்டை இலைக்கே

# "வெற்றித்திருமகன்" வீரஉலா!

புரட்சித்தலைவரின் புன் சிரிப்பைப் பார்த்து எத்தனை நாள் ஆயிற்று?

-இதோ அவர் சிரிக்கிறார்! வீடியோ படத்தில் புரட்சித்தலைவரைப் பார்க்கும் நமது கண்கள் உற்சாகப் பெருக்கால் பனிக்கின்றன! கைகள் நம்மையறியாமலே இறைவனை நோக்கி நன்றி வணக்கம் தெரிவிக்கின்றன.

"எம்.ஜி.ஆர். பத்து நாள் குழந்தையாகத் தான் இருக்கிறார். தன்னைச்சுற்றி என்ன நடக்கிறது என்பது அவருக்குத் தெரியாது" -என்று நெஞ்சத்தில் கிஞ்சிற்றும் ஈவுஇரக்கம் இன்றிக் கூறியவர் கருணாநிதி! சட்டியில் இருப்பது அகப்பையிலே என்பது போல அவர் உள்ளத்திலே உள்ள ஆசையைச் செய்திபோல வெளியிட்டிருக்கிறார்!

நாலரைக்கோடி தமிழக மக்களின் வாழ்த்து பலித்து, கருணாநிதியின் "சாபம்" மட்டும்தோற்றுப் போய், கருணாநிதியின் அரசியல் வாழ்வு போல் சிதைந்து கிடப்பதை நாட்டுக்கு உணர்த்தும் புரட்சித்தலைவர் பற்றிய திரைப்படம்தான் "வெற்றித் திருமகன்"

அக்டோபர் 5ந் தேதிக்கு முன் பார்த்தது அந்தப் புன்சிரிப்பை! அடேயப்பா-எவ்வளவுநாள் கழித்து மீண்டும் பார்க்கமுடிகிறது!

-படத்தில் புரட்சித்தலைவரின் செவ்வானத்துமஞ்சள்நிலாசிரிப்பைப் பார்க்கிற ஒவ்வொரு உள்ளமும் மகிழ்ச்சியில் துள்ளுகிறது!

"கருணாநிதி சொல்வதில் ஓரளவு உண்மை இருக்குமோ?" என்றுகூட சிலர் ஐயம் எழுப்பிஇருக்கலாம் அல்லவா?

முப்பதுநிமிடம் ஓடும்இந்தப் படத்தைப் பார்த்த பிறகுதான் கருணாநிதி மீது தமிழகமே ஒரு மனதாக நம்பிக்கையில்லாத்

## தீர்மானத்தை நிறைவேற்றப் போகிறது!

படத்தின் தொடக்கம் அன்னை இந்திரா பற்றியது. கூட்டங்களில் பேசுவது-மக்களைநோக்கி மாலைகளை வீசுவது-இப்படிப்பட்ட காட்சிகளை மகிழ்ச்சியுடன் காண்கிறோம். அன்னை இந்திரா கொல்லப்பட்டு கிடத்தப்பட்டிருக்கும் காட்சி உள்ளத்தை உறையச் செய்கிறது. அன்னையின் அஸ்தியை இமயப் பனிமலையில் தூவும் காட்சி, பிரார்த்தனை நிகழ்ச்சி உள்ளத்தை உலுக்கிவிடுகிறது.

அடுத்து புரட்சித்தலைவர் பற்றிய படம்! அப்பல்லோமருத்துவமனைக் காட்சிகள்- புரட்சித்தலைவரை அமெரிக்கா கொண்டு செல்ல ஏற்பாடு செய்யப்பட்ட தனி விமானத்தின் உள்அமைப்பு ஆகியவற்றைப் பார்க்கிறோம்.

அமெரிக்காவில் நியூயார்க் நகரை ஒட்டி ப்ருக்ளினில் உள்ள 'டவுன் ஸ்டேட் மெடிக்கல் சென்டர்' மருத்துவமனையின் வானளாவிய கட்டிடக் காட்சி! அங்கே அமெரிக்க முகங்கள்-அதை அடுத்து முதல்வரின் தனிச் செயலர் பரமசிவம் ஐ. ஏ. எஸ்! .... உள்ளம் துடிக்கிறது...புரட்சித்தலைவர் பக்கம் காமிரா எப்போது போகும் என்ற துடிப்பு!

காமிரா மாடிப்பக்கம் போகிறது! புரட்சித்தலைவர் இருக்கும் அறையின் வாயில்! காமிரா நிற்கிறது! புரட்சித்தலைவருக்குப் பணிவிடை செய்யும் நர்சுகளைப் பார்க்கிறோம்! அறையைத் திறந்துகொண்டு காமிரா உள்ளே செல்கிறது.

ஓ...! ஆயிரம் நிலவுகள் சேர்ந்த அற்புதச் சிரிப்புடன் புரட்சித்தலைவர் அங்கே! பாலைவனத்தில் நிற்பவன் உடம்பெல்லாம் பனிக்கட்டிகள் விழுந்த மாதிரியான உற்சாகச் சிரிப்பு உடம்பெங்கும் பரவுகிறது!

புரட்சித்தலைவருடன் அன்னை ஜானகி அம்மையார்! இருவரும் 'ஜோக்' சொல்லி விழுந்து விழுந்து சிரிப்பது... நெஞ்சமெல்லாம் இனிக்கிறது!

எதைச் சொன்னாலும் புரியாத-விளங்காத சிலபேர், புரட்சித் தலைவருக்கு வலதுகை விளங்காது என்றார்களல்லவா?

அன்னை ஜானகிஅம்மையார் பரிமாற-புரட்சித்தலைவர் வலது கையால் ரொட்டித்துண்டுகளை எடுத்து சுவைத்துச் சாப்பிடுவதைப் பார்க்கிறோம்!

உணவுத் துணுக்கு, வாயின் ஓரத்தில் ஒட்டிக் கொண்டதைப் புரட்சித்தலைவர் தமது வலதுகையால் துடைப்பது, மோவாயைத் தடவிவிடும் அவரது மானரிசம் (Mannerism) எல்லாம் -நம் இதய தெய்வம் எழுச்சியுடன்-நன்றாக இருக்கிறார் என்பதை நாட்டுக்கு உணர்த்துகிறது.

சாப்பிட்டு முடித்ததும் தட்டை எடுத்துக் கொண்டு, புரட்சித்தலைவரிடம் பால் தம்ளரை அன்னை ஜானகி அம்மையார் கொடுக்கிறார். புரட்சித் தலைவர் அதை வாங்கி ரசித்து அருந்துகிறார்!

ஒவ்வொரு காட்சியும் கனிச்சாறு என்றால், அதற்குப் பின் குரல் கொடுத்த வலம்புரிஜான் எம்.பி-யின் வர்ணனை கற்கண்டு!

புரட்சித்தலைவரைப் பற்றி இனி எவர் என்ன சொன்னால் என்ன? அவர் நன்றாக இருக்கிறார்! விரைவில் நம்மோடு இருப்பார் என்பதைத் தமிழக மக்களுக்கு உணர்த்துகிறது இப்படம்!



ஊரெங்கும் சென்று புரட்சித்தலைவர் பற்றி அவதூறு விஷ வாயுவைப் பரப்பும் 'யூனியன்கார்பைடா'கத்திகழும் கருணாநிதி செயலைத் துடைத்து, நாட்டுக்கு உண்மை எனும் பிராணவாயு தரும் நம்பிக்கை நட்சத்திரம் இந்த "வெற்றித் திருமகன்!"

புரட்சித் தலைவரிடம் நாட்டு மக்கள் வெற்றிக் கனியைத் தந்திட அச்சாரம் இந்தப் படம்! பொய் சொல்லும் கருணாநிதி அணிக்கு இது ஓர் பாடம்!

-அ. பொ. நா.

# கழகத் தோழர்களே, கவனம்! கவனம் !!

கழகத் தோழர்களே, 24-ந் தேதி தேர்தல் - இடையில் இருப்பது நான்கே நாட்கள்.

பொன்மனச் செம்மல், புரட்சித் தலைவரிடம் வெற்றிக் கனியை சமர்ப்பிக்க விரைந்து செயல் படுங்கள்.

வீதிக்கு வீதி,வீடுவீடாகச்சென்று புரட்சித்தலைவர் அரசின் சாதனைகளைக் கூறிடுவீர்.

தேர்தல் பணியில் ஈடுபடும் கழகத் தோழர்கள், தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடத்தைவிட்டு எக்காரணத்தைக் கொண்டும் வேறு இடங்களுக்குச் செல்லக்கூடாது!

ஒவ்வொரு வாக்காளர்களையும் நேரில் சந்தித்து கழகத்திற்கு வாக்களிக்குமாறு பணிவுடன் வேண்டிக் கொள்ளுங்கள்.

கண்துஞ்சாது கடமை மறக்காது பணியாற்றுவீர்.

வெற்றி வாகை சூடுவீர்!





ஆர். மார்க்கபந்து அறிக்கை

# பிற்பட்டோர் நலனை புறக்கணித்தவர் கருணாநிதி

## ஏழை எளியோரின் பாதுகாப்பு அரணாக உள்ளது கழக ஆட்சியே

வேலூர், டிச. 19- பிற்பட்டோர் நலனை அடியோடு புறக்கணித்தவர் கருணாநிதி. ஏழை எளிய மக்களின் பாதுகாப்பு அரணாக உள்ள கழக ஆட்சியே மீண்டும் அமைய அனைவரும் ஒத்துழைக்க வேண்டும் என மார்க்கபந்து வேண்டுகோள் விடுத்துள்ளார்.

உழைப்பாளர் முன்னேற்றக் கட்சித் தலைவர் ஆர். மார்க்கபந்து விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:--

கருணாநிதி முதலமைச்சராக இருந்த காலத்தில், பிற்படுத்தப்பட்ட பிரிவினரின் நலனை அடியோடு புறக்கணித்தார்.

சட்டநாதன் கமிஷன் அறிக்கையை அமுலாக்க மறுத்தவர் கருணாநிதி.

அப்படிப்பட்ட தி.மு.கவினருக்கு, யாதவர்கள் சலவையாளர்கள்போன்ற பிற்பட்ட பிரிவினர் இத்தேர்தலில் தக்க பாடம் கற்பிக்கவேண்டும்.

ஏழை எளிய மக்களின் பாதுகாப்பு அரணாக உள்ளது முதல்வர் எம். ஜி. ஆரின் கழக அரசுதான்.

ஆகவே அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் மற்றும் கழகக் கூட்டணி வேட்பாளர்களையே பிற்படுத்தப்பட்ட மக்கள் ஆதரிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு மார்க்கபந்து தெரிவித்துள்ளார்.

## காங்கிரசில் கபில்தேவ்

சண்டிகர், டிச. 20- பிரபல கிரிக்கெட்விளையாட்டுவீரர் கபில்தேவ் இந்திரா காங்கிரசில் சேர்ந்தார்.

சண்டிகரில் நிருபர்களுக்கு கபில்தேவ்பேட்டி அளித்தார்.

அப்போது அவர் தாம் இந்திரா காங்கிரசில் சேர்ந்துள்ளதாக அறிவித்தார். 1979-முதல் இ. காங்கிரஸ் ஆதரவாளராக இருந்த நான் இப்போது கட்சியில் சேர்ந்தேன் என்றார்.